உள்ள ஓங்காரேச்வரரை வணங்கி பூஜித்தனர். பெருமான் இந்திராதி தேவர்களை கடலிலிருந்து மீட்டுக்கொடுத்தார்.

க்ருத யுகத்தில் தேவர்களுக்கும் அஸுரர்களுக்கும் அடிக்கடி யுத்தம் மூண்டது. அசுரர்கள் தேவர்களின் வெற்றிக்கு காரணம் கேட்டனர். "வேதங்கள் அவர்களைக் காப்பாற்றுகின்றன. ஆகவே சங்கன் என்ற கடல்வாழ் அசுரனைக்கொண்டு வேதங்களைக்கிருடி ஒளித்துவிடுங்கள். தேவர்கள் ஒடுங்கிவிடுவார்கள்." — என்று ஆலோசனை கூறினார் சுக்ராசார்யர். அப்படியே சங்காசுரன் வேதங்களைக்கடலில் ஒளித்துவிட்டான் தேவர்கள் கதி கலங்கினர். ஓங்காரேசனை சரணம் அடைந்தனர். பரமேச்வரன் நந்திகேச்வரனை வைகுண்டத்திற்கு அனுப்பி நாராயணனுக்கு செய்தி தெரிவித்தார். சிவபெருமான் விருப்பப்படி நாராயணன் மீன் உருவாகி கடலில் புகுந்து சங்காசுரனைக் கொன்று வேதங்களை மீட்டு கர்வத்தினால் அவைகளைத் தனக்குள் அடக்கிக்கொண்டார். உலகில் ஓங்காரநாதம் மட்டும் எஞ்சியது. மறுபடியும் பிரம்மதேவன் ஓங்காரேச் வரனை வழிபட்டார். ஓங்காரேச்வரன் அருளுகிறார் — "இந்த ஓம்கார குண்டத்தில் ஒரு மாதகாலம் பூஜைசெய்து வேதங்களை விஷ்ணுவிடம் இருந்து பெறுவாய். உனது நான்கு முகங்களாலும் மறுபடியும் வேதங்கள் வெளிப்படும்." அப்படியே நடந்தது. காசியில் விச்வநாதர் அடிவருடிச் செல்லும் கங்கையைப்போல இந்த நர்மதைநதியும் ஓங்காரேச்வரன் அடிவருடிச் செல்வதால் மிகவும் பரிசுத்தமானது.

மஹாபலியை வெற்றிகொண்ட வாமனர்—திரிவிக்ரமனாக வளர்ந்து மிகவும் கர்வமடைந்தார். பரமசிவன் அவர் காலை வெட்டி வீழ்த்தினார். அதுவே "வாமனபாதம்" என்ற இந்த க்ஷேத்ரம்.

மஹாபலியின் பிள்ளையான பாணாசுரன் ஆயிரம் கைகள்கொண்டு இந்த ஓங்காரகுண்டத்தில் உள்ள ஆயிரம் லிங்கங்களையும் பூஜித்தான். அதனால் கர்வம் மிகுந்தான். அவனது கர்வத்தை அடக்க சிவன் விஷ்ணுவை ஏவினான். விஷ்ணு அவனது நான்கு கைகளை மட்டும் பாக்கிவைத்து மற்றவைகளை வெட்டி வீழ்த்தினான். பாணனும் கர்வத்தை விட்டு பக்தியுடன் பூஜித்து—சிவகணங்களில் ஒருவன் ஆனான்.

இங்கு ஒரு முக்கியமான செய்தி கிடைக்கிறது. (அத்யாயம் 10). சிவன் பார்வதிக்கு—நர்மதையின் பெருமையை எடுத்துச் சொல்கிறான்.

நர்மதை கங்கையைக் காட்டிலும் சிறப்புவாய்ந்த நதி. அதிலும் வலதுபுறம் ஓங்காரேச்வரரும் இடதுபுறம் அமலேச்வரரும் (அமரேச்வரரும்)

கோவில் கொண்டிருக்கும் இடத்தில் நர்மதையின் ஆழத்தில் ஓங்கார குண்டம் இருக்கிறது. அதன் மிகவும் ஆழ்ந்த பள்ளத்தில் காற்றும், தண்ணீரும் புகமுடியாத ஒரு கூடு. அந்த சூன்யத்திலிருந்து ஒரு நாதம் கிளம்புகிறது. அதுவே ஓங்காரம். அந்த நாதத்தின் அழுத்தம் அங்குள்ள பாறைகளைச் சிதள் சிதளாக உடைக்கிறது. இந்த உடைசல்களில் வேகமாகப்புகும் நீர்—உரசி உரசி அவை வழவழவென்று உருண்டை யாகவும் முட்டை வடிவாகவும் உருப்பெருகின்றன. இவைகள் எல்லாம் லிங்கங்கள். எங்கும் நிறைபரம் பொருளான பரமேச்வரன் இவைகளில் மேலும் கருணை ஒளியோடு பிரகாசிக்கிறான். மற்ற மூர்த்திகளைப் புதிதாக பூஜை செய்ய ஆரம்பிக்கவேண்டுமானால் அவைகளை மந்திரம் ஓதிப் புனிதம் ஆக்கி—பிறகு ஆவாஹனம் முதலிய கிரியைகளால் ஈசனை அங்கு எழுந்தருளப்பண்ணி பூஜை செய்வது உரிய முறையாகும். ஆனால் இந்த லிங்கங்களில் அந்த முறை தேவையில்லை. இவைகளைப் புனிதம் ஆக்கவும் வேண்டாம். ஆவாஹனம் செய்து எழுந்தருளப்பண்ணவும் வேண்டாம். அப்படியே எடுத்து பீடத்தில் அமர்த்தி— ஆஸனம் முதல் உரிய பூஜைகளைச் செய்யலாம். பாதரஸம், உயர்ந்த ரத்னங்கள், தங்கம், வெள்ளி, பஞ்சலோஹங்கள் முதலியவைகளில் தயாரித்த மூர்த்திகளைக் காட்டிலும் இந்த லிங்கங்கள் புனிதமானவை. ஸாந்நித்யம் நிறைந்தவை. சாதீட்டு முதலிய பூஜைக்கு விலக்கு நாட்களில்கூட இந்த லிங்கத்தை எடுத்துப் பூஜை ஆரம்பித்தவுடன் அந்தப் பூஜை வேளையில் பரிசுத்தனாகிறான். மஹாபலி சக்ரவர்த்தியின் பிள்ளையான பாணாசுரன் முதன் முதலில் இந்த ஆயிரக்கணக்கான லிங்கங்களை தன்னுடைய ஆயிரக்கணக்கான கரங்களால் பூஜித்தான். அதனால் இவைகளுக்கு பாணலிங்கங்கள் என்று பெயர். நம்நாட்டுக் கோயில்கள் முக்கியமாகப் பல இடங்களில் பெரிய அளவிலும் சிவபூஜை செய்யும் வீடுகள் எல்லா வற்றிலும் சிறிய அளவிலும் இந்த பாணலிங்கங்கள்தான் பூஜிக்கப்படு கின்றன. இந்த லிங்கங்களில் ஒரு புறம் ஒரு கோடு தெரியும். அது சிவபெருமான் அர்ஜுனனிடம் வில்லால் அடிப்பட்டதின் அடையாளம் என்று பெரியோர்கள் சொல்வார்கள்.

## கேதாரேச்வரம் (11-13)

இமயமலையின் கீழ்புறத்தில் திருக்கேதாரம் இருக்கிறது. பிரமன் முதலான தேவர்களும் மௌத்கல்யர் முதலிய முனிவர்களும் எப்போதும் பரமேச்வரனை பூஜிக்கும் இடம். இங்கு சிறிது பூஜை செய்து பெரும் பேறு பெறலாம். அதன் தென்புறத்தில் அந்தகாரஸுரன் என்பவன் கொடுமை செய்துவந்தான். அவனைக் கொன்று பார்வதிதேவி அங்கு "கௌரீச்வரம்"

என்ற லிங்கத்தை நிறுவினாள். அந்த லிங்கத்தை வழிபட்டுத்தான் இந்திரனுக்கு விருத்திரனைக் கொன்ற பாபம் துலைந்தது. வருணன் உதத்யர் என்ற முனிவரின் மனைவியைத் தீண்டின பாபத்தை இங்கு கேதாரேச்வரனை வழிபட்டு துலைத்தான். சனீச்வரன் ஆணிமாண்டவ்யரின் சாபத்திற்கு இங்கு விமோசனம் பெற்றான். குபேரன் இந்தப் பெருமானை வழிபட்டு நிதிகளுக்கெல்லாம் நாயகன் ஆனான். அத்ரி, அங்கிரஸ் முதலிய முனிவர்கள் கேதாரேசனை வழிபட்டு நல்ல புத்ரர்களைப் பெற்றார்கள்.

முற்பிறவியில் தக்ஷனுக்குப் பெண்ணாகப் பிறந்து பரமேச்வரனை மணந்த தாக்ஷாயணீதேவி தன் தந்தை தன் கணவருக்குச் செய்த அவமானம் தாங்காமல் அவன் பெற்ற உடலைத் தீக்கு இறையாக்கி ஹிமவான் பெண்ணாகப் பிறந்தாள். அந்த ஹிமயமலையிலேயே தன் பொருட்டுத் தவம் செய்யும் பரமேச்வரனை மறுபடியும் மணந்துகொள்ள நாரதருடைய உபதேசத்தினால் இந்த கௌரீ சிகரத்தில் தவமியற்றினாள். சிவனை மணந்து கணேசன், ஸ்கந்தன் என்ற பிள்ளைகளைப்பெற்று கணவருடன் மந்தரமலையிலும் வெள்ளியங்கிரியிலும் சஞ்சரித்தான். தந்தையான ஹிமவானுக்குப் பெண்ணைவிட்டுப் பிரிந்திருக்கமனமில்லை பரமேச்வரனை வேண்டினான்: அவன் வேண்டுகோளுக்கு இணங்கி பரமேச்வரன் கேதாரத்தில் என்றும் மறையாத நித்யவாசத்தை ஏற்றான்.

கேதாரேச்வரத்திற்கு மேல் மலையில் நந்தீச்வரன் வடக்கில் ஸ்கந்தேச்வரன் மேற்கில் கணநாதேச்வரன் என்ற மூன்று லிங்கங்கள் இருக்கின்றன.

ஸோமநாதம் (14–17) ஸௌராஷ்ட்ரதேசத்தில் சந்திரவம்சத்தில் ப்ருஹத்பலன் என்றொரு அரசன் இருந்தான். அவனுக்குப் பிள்ளை இல்லை. பயோஷ்ணீ—என்ற நதிக்கரையில் இருந்த முக்கல முனிவரைச் சரணம் அடைந்தான். அவர் அவனுக்குச் சிவதீட்சை செய்துவைத்து பஞ்சாட்சர உபதேசமும் செய்துவைத்தார். மந்திரிகளிடம் ஆட்சியை ஒப்புவித்துவிட்டு ஸோமநாதக்ஷேத்ரம் வந்துசேர்ந்தான் மூன்று வருஷங்கள் இடைவிடாது பஞ்சாட்சரம் ஜபித்து ஸோமநாதனை வழிபட்டான். அவனுடைய பக்தியைக்கண்டு அந்த க்ஷேத்ரத்தில் முன்னமேயே ஸோமநாதனிடம் பக்தி செய்துவந்த பக்தர்கள் பரவசம் அடைந்தனர். மூன்று வருஷங்கள் முடிவதற்குமுன்பே பரமேச்வரன் நந்தி முதலிய தன்னுடைய முன்னடியார்களை அனுப்பிவைத்தான். நந்திகேச்வரன் அரசனுக்கு ஸோமநாதனுடைய பெருமையை எடுத்துச் சொன்னார். சந்திரன் தக்ஷப்ரஜாபதியுடைய இருபத்தேழு பெண்களை அச்வதி முதலியவைகளை மணந்தான். அந்தப் பெண்களே நக்ஷத்ரங்கள். அவர்களிடையே

சந்திரனுக்கு ரோகிணியிடம் மிகுந்த பற்று. மற்றவர்களை உதாஸீனம் செய்தான். பெண்கள் தந்தையிடம் முறையிட்டனர். சந்திரனை அழைத்து எல்லோரையும் ஸமமாக பார்க்கும்படி புத்தி சொன்னார் தட்சன். பிறகுகூட சந்திரன் ரோகிணியிடமே அதிகப் பிரேமையைக் காட்டினான். இதைக் கேள்விப்பட்ட தக்ஷன் சந்திரனுக்கு க்ஷயரோகம் வருமாறு சபித்தான். சந்திரன் அத்ரிமஹரிஷியைச் சரணமடைந்தான். அத்ரிமஹரிஷி ''ஸௌராஷ்டிரதேசத்தில் உள்ள ஸோமநாதனை வழிபட்டுப் பல பெரியோர்கள் நலன்களைப் பெற்றிருக்கிறார்கள். நீயும் அங்குபோய் ஸ்ரீ ருத்ரபாராயணம் செய்து பில்வபத்ரங்களால் அர்ச்சிப்பாயாக—'' என்று உபதேசித்தார். இப்படிப் பத்து வருஷங்கள் சந்திரன் (ஸோமன்) ஸோமநாதனை வழிபட்டான். லிங்கத்திலிருந்து சிவபெருமான் வெளிப்பட்டு அவனைக் கண்குளிரக் கடாட்சித்தார். எலும்பும் தோலுமாக நின்ற சந்திரன உடன்புஷ்டியடைந்து மிகவும அழகாக விளங்கினான். பரமேச்வரன் அவனுக்கு வரமளித்தார். ''தக்ஷசாபத்தினால் உனக்கு ஏற்படும் இளைப்பு—உன்னிடமுள்ள அமுதத்தை தேவர்கள் பருகுகிறார்கள் என்பதற்கு அத்தாட்சியாகும். என்னுடைய அருளினால் உனக்கு வளர்ச்சியும் உண்டாகும். எட்டாம்பிறையில் வளர்ந்த உன்னை என் தலையில் ஆபரணமாகச் சூடுவேன்.'' இந்தச் சரிதத்தை அரசனுக்கு எடுத்துச்சொன்ன நந்திகேசன் அரசனை வாழ்த்தி தன் தோழர்களுடன் விடைபெற்றுக் கைலாசம் சேர்ந்தார். ப்ருஹத்பலன் மேலும் பக்தியோடு ஸோமநாதனை வழிபட்டு ''மஹாரதன்'' முதலிய நூறு பிள்ளைகளைப்பெற்று மகிழ்ந்தான்.

நாகநாதேச்வரம் (18) ஆவட்டக என்றும் க்ஷேத்ரத்தில் பரமேச்வரன் நாகநாதன் என்ற பெயரோடு விளங்குகிறான. அங்கு நாககுண்டம் என்று தீர்த்தம் பூமிக்கு அடியில் இருக்கிறது. பூமியைத் தாங்குவதற்காக நியமிக்கப்பட்ட ஆதிசேஷன் அங்கு கோயில்கொண்டுள்ள லிங்கததை தன உடலால் சுற்றி ஆயிரம படங்களால் குடைபிடித்து வழிபட்டான். சிவபெருமான் ஆதிசேஷனுக்கு பூமியைத் தாங்கும் சக்தியை அளித்தார்.

பாம்புகளின் தாயாரான கத்ரு வஞ்சனையினால் தன் ஸகோதரியான விநதையை—கருடனின் தாயாரை அடிமையாக்கிக் கொண்டாள். அந்தப் பாவம் தீர கத்ரு—நாகநாதனை வழிபட்டாள். தன் குழந்தைகளான கம்பளன், அச்வதரன் என்ற பாம்புகளை பரமேச்வரனுக்கு காதுக்குண்டலங்களாகவும் வாஸுகியையும், தக்ஷகனையும் கைகளுக்கு வளைகளாகவும் சங்கபாலன், ஏலகன் என்ற நாகங்களை பாதங்களுக்கு காப்புகளாகவும் த்ருதராஷ்டிரன், பிபிச்சலன் என்ற நாகங்களையும் ஹாரங்களாகவும் ஸமர்ப்பித்தாள். அது மிகவும் பாவனமான க்ஷேத்ரம்.

குஸ்ருணேசம். (20) பீமரதி நதியின் வடக்குக்கரையில் முப்பது குரோச தூரத்தில் சூலபாதம் என்ற தீர்த்தம் இருக்கிறது. அங்கு பரமேச்வரன் அந்தகாசுரனைச் சூலத்தினால் கொன்றான். ரத்தக்கறை படிந்த அந்தச் சூலத்தை தூக்கி எறிந்தான். அந்தக் குத்துப்பட்ட இடத்தில் ஒரு குளம் தோன்றியது. அதுவே சூலபாதம். பாற்கடலில் அமுதம் கடைந்தபொழுது அசுரர்களும், தேவர்களும் கடலிலிருந்து தெரித்துவிழுந்த ரத்னங்களை எடுத்துக்கொண்டுவிட்டதால் கடலில் ரத்னங்கள் வற்றிவிட்டன. கடலுக்கு ரதனாகரம் என்ற பெயரும் பொருளற்றதாகிவிட்டது. மறுபடியும் அந்தக் கடல்கள் இங்கு சூலபாதக்கரையில வந்து சிவபெருமானை வழிபட்டு அவனருளால் மறுபடியும் தம் ஆழங்களிலே ரத்னங்கள் முளைக்கப்பெற்றன. உத்தாலகர் என்ற முனியர் மோக்ஷம் விரும்பி சிவபெருமானைக் குறித்து தவமியற்றினார். சிவபெருமான் அவர்முன் தோன்றி ஞான பக்தி வைராக்யங்களை உபதேசித்து அவருக்கு மோக்ஷத்திற்குத் தகுதியளித்தார்.

வைத்யனாதம் (20) வனகண்டம் என்ற ஒரு பிரசித்தமான க்ஷேத்ரம். கொடிய மிருகங்களும் நெருக்கமான மரங்களும புதர்களும் அடர்ந்த காட்டின் இடையே வைத்யநாதன் என்ற பெயருடன் பரமேச்வரன் விளங்குகிறார். அச்வினி தேவர்கள் இங்கு சிவபெருமானை வழிபட்டு ஆயுர் வேதத்தைக் கற்று தேவர்கள் ஆனார்கள். அங்கு ஜபன என்று ஒரு வேடன் தன் மனைவியோடும் கூட்டத்தோடும் பரமேச்வரனை வழிபட்டுவந்தான். தான் அழித்த மிருகங் களையும் குளங்களில் பிடித்த மீன்களையும் வைத்யநாதனுக்கு பணிவோடு அர்ப்பணம் செய்வான். மாலை வேளைகளில் தன் கூட்டத்தோடு வைத்ய நாதன் சந்நிதியில் நர்த்தனம் ஆடுவான். வைத்யனாதனை வழிபட வந்த முனிவர்கள் சந்நிதியில கிடக்கும அசுத்தங்களை நினைத்து வருந்தினர். வைத்யனாதன் அவர்களுக்கு ஜபனுடைய கபடமில்லாத பக்தியைக் காட்ட விரும்பி—ஒரு நாள் அங்கு அடாத மழையையும் காற்றையும் உண்டு பண்ணினான். நகரமுடியாமல அங்கேயே சிறைப்பட்ட முனிவர்கள்—வேடன் தன் கூட்டத்தோடு ஆடிக்கொண்டு கையில் மாமிசதுண்டுகளும் மீன் மாலைகளும் ஏந்திவருவதைப் பார்த்தனர். செருப்புப்போட்ட காலால் வைத்யனாதன் தலையில் உள்ள பழைய நிர்மால்யங்களை அகற்றி வாயில அடக்கிகொண்டுவந்த நீரை வைதயனாதன் பேரில் கொப்பளித்து—கொண்டுவந்த மாமிசங்களையும் மீனகளையும பரிவோடு அவன் நிவேதனம் செய்யும் அழகைப் பார்த்தனர். திடீரென்று சிவபெருமான் கண்களில் ரத்தம் கசிந்தது. பச்சிலைகளைக் கசக்கிப்பிழிந்து அப்பிப்பார்த்து ரத்தப்பெருக்கு நிற்கவில்லை. தன் கண்களில் ஒன்றைப்பிடுங்கி அர்ப்பணம் செய்தான. ரத்தப்பெருக்கு நின்றது. மறு கண்ணில் ரத்தம் கசிந்தது. பச்சிலையைத் தேடவில்லை. அடையாளத்திற்காக தன் கால்களை சிவபெருமானின்

ரத்தம்வரும் மறு கண்ணில் உதைத்துக்கொண்டு தன் மறு கண்ணைப் பிடுங்கி அர்ப்பணம் செய்தான். சிவபெருமான் அவன் பக்தியை மெச்சி கண்களைக் கொடுத்துக் காட்சி அளித்தான். இந்த வரலாறு விரிவாக இங்கே கூறப்படுகிறது.

த்ர்யம்பகம் (21-23) மந்தரம், கைலாசம், மேரு முதலிய பர்வதங்கள் சிவபெருமானுக்கு இருப்பிடங்கள். ஆனால் த்ரியம்பகமலையே சிவபெருமானின் திருஉருவமாக அமைந்திருக்கிறது.

இந்திரனிடம் மயங்கிய அஹல்யையை சபித்துவிட்டு மன அமைதி இழந்த கௌதமர் கோகாமுகம், கேதாரம், ஓங்காரம், குருக்ஷேத்ரம், பிரபாஸம், புஷ்கரம் முதலிய புண்ய க்ஷேத்ரங்களில் நீராடி சிவபெருமானை வழிபட்டார். கடைசியில காசிக்கு வந்து மணிகர்ணிகையில் ஸ்னானம் செய்து விச்வனாதனை வழிபட்டார். விச்வவசன் "உன் வினை தீர த்ரியம்பகம் போ– அங்கு சிம்மராசிக்கு குரு வரும்போது புண்யதீர்த்தத்தில் நீராடு– என்று அருளினான். த்ரியம்பகம் வந்து தவம்செய்து– காத்திருந்தார் கௌதமர். சிம்மராசிக்கு குரு வந்தபோது நீராட தீர்த்தம் இல்லை. சிவபெருமானை வழிபட்டார. சிவபெருமான் தன்னுடைய சடையை விரித்து மலையில் அடித்தார். அங்கு ஓர் ஊற்று பெருகியது. அதில் மூழ்கி கௌதமர் பாவம் நீங்கி மன அமைதி பெற்றார். அப்படிப் பெருகின நதி பரமேச்வரனை வழிபட்டாள். தனக்கு நர்மதையைப் போலவும், கங்கையைப் போலவும் பெருமை வாய்க்க வேண்டுமென வேண்டினள். சிவபெருமான் "உனக்கு அவர்களைவிடப் பெருமை உண்டு. வ்ருத்த கங்கை (மூத்த கங்கை) எனப் பெயர் விளங்கும். கங்கையும், நர்மதையும் உன்னிடம் குரு சிம்மராசியில் இருக்கும்போது நீராடி பல பெருமை பெறுவர்" என்று அருளினார். ஒருவன அந்த கோதாவரியில் நீராடின உடன் மனத் தூய்மை பெற்று மோட்சமடையத் தகுதி பெறுகிறான். இங்கொரு வர்ணனை. (அத்யாயம் 22) பாரத பூமியையே பரமேச்வரனின் ஸ்தூல ரூபமாகக்கொண்டு க்ஷேத்ரங்களை உடல் உருப்புகளாக வர்ணிக்கப்படுகிறது. த்ர்யம்பகம்-நாஸிக்–(மூக்கு), காசி (கால்கள்), ஸ்ரீசைலம உஜ்ஜயினி (கண்கள்), ஓங்காரம் (கழுத்து), நாகநாதம் (காதுகள்), கேதாரமும் அதைச் சுற்றியுள்ள க்ஷேத்ரங்களும் சிவபெருமானின் மற்ற அங்கங்கள் பாரத நாட்டில் அங்கங்கே காணப்படும் எழுபதினாயிரம் கோயில்களும் பரமேச்வரனின் நரம்புகள், சிதம்பரம் சிவபெருமானின் இதயம். ஒரு மனித உருவத்தின் உடலமைப்பையும், அதில் முற்றிலும் பொருந்தாத இந்த க்ஷேத்ரங்களையும் ஒன்றுசேர்த்து எந்த வடிவத்தால் சிவபெருமானைக் காண்பது என்பது புரியாத புதிர்.

கோகர்ணம் (23-26) மேலக் கடற்கரை ஓரத்தில் அமைந்திருக்கும் இந்த க்ஷேத்ரம் மிகவும் புனிதமானது. இங்கு மந்திர ஜபம் செய்பவர்களுக்கு வெகு சீக்கிரத்தில் மந்திர ஸித்தி கிடைக்கிறது. வாமதேவர் சிவபெருமானை வழிபட்டுக் கைவல்யம் பெற்றார். அவர் பாடின துதி (26) பல உபநிஷத் தத்துவங்களை உள்ளடக்கி-பல உபநிஷதக் கருத்துக்களுக்கு விளக்கம் கூறி விரிவாக அமைந்திருக்கிறது. பரசுராமர் சிவனை வழிபட்டு தனுர் வேதத்தையும் பரசு (கோடாலி) யையும் பெற்று தந்தையைக் கொன்ற கார்த்தவீர்யனையும், மற்ற க்ஷத்திரியர்களையும் கொன்று-வென்ற பூமியை காச்யபருக்கு தானம் செய்து இங்கு சூர்ப்பாகரம் என்ற ஆச்ரமத்தை நிறுவி மனமடங்கித் தவமியற்றுகிறார். அகோரம் என்ற முகத்திலிருந்து சிவபெருமான் தோன்றி தேவாதி முனிவர்களுக்கு இங்கு ஞானம் வழங்கினார். அத்யாயம் இருபத்தாறு உபநிஷத் சொற்களாலேயே இந்த ஞானத்தை வழங்குகிறது. மிகவும் அழகிய கோப்பு.

ஸ்ரீசைலம் (27) கண்டாகர்ணன் என்ற சிவகணத்தலைவன் இங்கு கண்டாகர்ணேச்வரன் என்ற லிங்கத்தையும் அதன் முன்னே ஸுதாகுண்டம்-என்ற அமுதக்கிணற்றையும்-மல்லிகார்ஜுனன் என்ற ஸ்ரீசைலேச லிங்கத்தையும் அதன் முன்புறம் விபூதிக் கிணற்றையும்-ஹாடகேச லிங்கத்தையும் அதன் முன்னே ஹாடகக் கிணற்றையும் தோற்றுவித்தான. ஸ்ரீசைலேசனுக்கு வழக்கில் உள்ளதான மல்லிகார்ஜுனன் என்ற பெயர் காணப்படவில்லை. ஆனால் அம்பாளுக்கு பிரமராம்பா என்ற வழக்குப் பெயர் காணப்படுகிறது. ஸ்ரீதேவி தன் பிள்ளையான மன்மதனை சிவபெருமான் நெற்றிக்கண்ணால் எரித்ததற்கு வருந்தி சிவபெருமானை வழிபட்டு அவனுக்குப் புத்துயிர் அளித்தாள். அதனால் அவள் பெயரால் ஸ்ரீசைலம் விளங்குகிறது. தேவாசுர யுத்தத்தில் கந்தவேள் தாரகன் முதலிய அசுரர்களை தன் சீடர்களை வென்றுவிட்டான் என்று சண்முகனை-நீ பாம்பாய் மயங்கிக்கிடப்பாய் அப்படிப் பாம்பு உருவத்திலே ஷஷ்டி திதியில் உன்னை வழிபடுபவர்களுக்கு எல்லா நன்மைகளும் மேன்மைகளும் உண்டாகும் என்று சபித்து அருள் செய்தார், அசுர குருவான சுக்ராசார்யர். பாம்பு உருவில் கந்தன் ஸ்ரீசைலத்தில் சிவனை வழிபட்டுப் பெருமை அடைந்தான். தன் மகனைச் சபித்த ருஷியை பரமசிவன் விழுங்கி விட்டார். பரமசிவன் வயிற்றிலே வாழ்ந்த அந்த ருஷி பரமசிவனைத் துதித்து சுக்கிரமாக வெளிவந்தார். ஆதலால் அவருக்கு சுக்ராசார்யார் என்ற பெயர் ஏற்பட்டது.

ராமேச்வரம் (28) இங்கொரு விசித்திரம். பொதுவாக வழக்கில் ஒரு கதை உண்டு. ''ராமன் கடலுக்கு அணைபோட நினைத்து கடற்கரையில் அணை கட்ட வேண்டிய திசை குறித்து தன் தனுசினால் ஒரு கோடு

இழுக்கார். அதுவே தனுஷ்கோடி ஆயிற்று.'' அந்த தனுசு கிழித்த கோடு ஒரு புண்ணிய ஸ்தலம் ஆயிற்று என்று அதை ஒட்டி இன்றும் தனுஷ்கோடியில் ஸ்னானம் செய்பவர்கள் இந்தக்கதையை நினைவுபடுத்தும் சுலோகம் சொல்லி பூஜை செய்கின்றனர். ஆனால் இங்கு ஸ்ரீ சிவரகசியத்தில் வேறுவிதம் கூறப்படுகிறது. முப்புரங்களை எரித்த பரமன் அப்போது உபயோகப் படாத வில்லினால் கடற்கரையைக் கீறினான். அதுவே தனுஷ்கோடி ஆயிற்று என்று தனுஷ்கோடிக்கு இந்தப் பெருமையும் சேருகிறது. அங்கு உள்ள கந்தமாதன பர்வதமே சிவனுருவானது. பிரம்மா திலோத்தமை என்ற அப்சரஸிடம் தவறி நடந்த பாபத்தை இங்கு போக்கிக்கொண்டார். ஈசானனே பிரம்மாவின் சிரஸைக்கிள்ளின பாபத்தை இங்கு தொலைத்தார். ப்ருகுவின் சாபத்திலிருந்து நாராயணன் இங்குதான் கரை ஏறினார். மனைவியை இழந்த ராமன் மனது ஒடிந்து, இங்கு இருந்த அகஸ்தியரை நாடி—பஞ்சாட்சரம்பெற்று கந்தமாதனப் பெருமானை வணங்கி—கடலில் அணைகட்டி—லங்கை சென்று ராவணனைக் கொன்று சீதையை மீட்டு—ராவணன் என்ற சிவபக்தனைக் கொன்ற பாபம்தீர—ராமேச்வரம் என்ற லிங்கத்தைப் பிரதிஷ்டை செய்து வழிபட்டார். நாராயணனும் ஒவ்வொரு நாளும் சேதுமாதவன் என்ற பெயரில் கங்கை நீர் கொணர்ந்து ராமநாதனை வழிபட்டார்.

பனிரெண்டாவதான — காசி — வாராணசியைப் பற்றிய விரிவான வரலாறு ஏழாவது அம்சத்தில் கூறப்படுகிறது.

இருபத்தொன்பது முதல் முப்பத்தொன்று வரையுள்ள அத்யாயங்களில் ஹரித்வாரம் தொட்டு கங்காசாகரம் என்ற கங்கை கடலைச்சேரும் இடம் வரை உள்ள புண்யஸ்தலங்களின் வரலாறு கூறப்படுகிறது. கேதாரத்திற்கு மேற்கே ஹரித்வாரம். சிவபக்தனான முரன் என்ற அசுரனை லக்ஷ்மியிடம் தகாத முறையில் நடந்துகொண்டதற்காக நாராயணன் கொன்றார். அந்தப் பாபம் தீர இமயமலைத் தாழ்வரையில் ஹரித்வாரேச்வரன் என்ற லிங்கத்தை பிரதிஷ்டை செய்து லட்சுமியுடன் நாராயணன் பூஜித்தார். அந்த சிவனுடைய பீடத்திலிருந்து கங்கை ஊற்றெடுத்தது அந்த கங்கைதான் குருக்ஷேத்ரம், மதுவனம், பிரயாகை, அயோத்யா வழியாக கங்காசாகரத்தில் கடலில் சங்கமித்தது. பிரயாகத்தில் பிரமதேவன் சிவனைக்குறித்து யாகம் செய்தார். அதற்குதவியாக பூமிக்கு வந்த ஸரஸ்வதியை அடையாளமாக பூமியிலே நதியாக பெருக்கெடுக்கும்படி ஆணையிட்டார் பிரம்மன். அதற்குப் பணியவில்லை சரஸ்வதீ. நீ மறைந்து கங்கை யமுனையில் கரைந்துபோ என்றார் பிரம்மன். அதுவே—ஸரஸ்வதி மறைவாக சங்கமிக்கும் த்ரிவேணீ. அதன் மேல்புரம் பிரம்மா யாகம் செய்த

இடத்தில் அழியாத ஆலமரம், அட்சயவடம். அங்கு தீர்த்த உருவத்திலேயே பரமசிவன் பூஜிக்கப்பெறுகிறார். அயோத்தியில் சரயூவுடன் சங்கமித்த— கங்கையின் கரையில் சுதேச்வரலிங்கம் மிகவும் புகழ்வாய்ந்தது. கங்கா சாகரம் (கல்கத்தா) என்னுமிடத்தில் ஸாகரேச்வரன் என்ற லிங்கம். அங்கு வில்வமரங்களை வளர்த்து — ஸாகரேச்வரனை வழிபட்டு ஒரு வேடன் சிவகணங்களில் ஒருவன் ஆனான்.

குருக்ஷேத்ரம்— (32–33) சந்திர வம்சத்தில் குரு ஸம்வரணன் என்று ஒரு அரசன் வேட்டையாடும் பொருட்டு வனம் சென்றவன் அங்கு ஹரிமேதஸ் என்ற முனிவரின் ஆச்ரமம் அடைந்தான். அந்த முனிவர் சொன்னார். "எனக்கு சிவபெருமான் அருள் கிடைத்தது. ஒரு லிங்கத்தைப் பூஜை செய்து வருகிறேன். சிவபெருமான் என் முன் தோன்றி-குரு ஸம்வரணன் என்றொரு அரசன் இங்கு வருவான். அவன் உன் விருப்பப்படி எனக்கு கோயில் அமைத்து இங்கு நகரத்தையும் அமைத்து அரசாள்வான் என்று வரம் கிடைத்தது. அதன்படி அரசே! நீ வந்துவிட்டாய் உன் கடமையைச் செய்" என்று. பரமசிவன் ஆணையைச் சிரமேற்தாங்கி அவ்வரசன் ஆலயமெழுப்பி நகரத்தையும் அமைத்தான். அதுவே குருக்ஷேத்ரம். இங்குதான்-க்ஷத்திரியர்களைப் பல தடவை கொன்று குவித்த பாபம் தீரப் பரசுராமன் ஸமந்த பஞ்சகம் என்ற குளத்தை வெட்டினார். இந்த தீர்த்தத்தில் பித்ருக்களுக்கு தர்ப்பணம் செய்வது மிகவும் புனிதமான செயலாகும்.

ஸித்தேசம் (ஸித்–பூர்) (34) குருக்ஷேத்ரத்திற்கு நேர் மேற்கே-வேணிகா நதிக்கரையில் ஸித்தேசம் (ஸித்பூர்) என்ற க்ஷேத்ரம் இருக்கிறது. அங்கு மங்கணகர் என்ற முனிவர் சித்தேசனை வழிபட்டு சித்தர் ஆனார். அவர் கையில் இருந்து வற்றாத பால் ஊற்று பெருக்கெடுத்தது. அதை இடைவிடாது சிவபெருமானுக்கு அபிஷேகம் செய்துவந்தார். அந்த ஆனந்தம் மேலிட நர்த்தனம் ஆடினார். அவருடைய ஆட்டத்தில் உலகமே ஆட்டம் கண்டது. தேவர்கள் தவித்தார்கள். சிவபெருமான் தன் கட்டை விரலை அழுத்தி உலகை நிலை நிறுத்தினார். மங்கணகன் முன்னால் திருநீறு மலையாகத் தோன்றியது. மங்கணகன் ஆட்டம் நின்று திருநீறு பூசி உவகை பெற்றார். இந்திர குமாரனான ஜயந்தன்—ஐராவதன் என்ற யானை மேலேறி பவனி வரும்போது ஒரு கன்று யானை அடியில் மிதிபட்டு இறந்தது. கன்றுக்குடையவரான சுதர்சன முனிவர் ஜயந்தனை வெண்குஷ்டம் பிடிக்கட்டும் என்று சபித்தார். அவன் இந்த சித்தேசனை ஸ்ரீருத்ர ஜபம் செய்து வழிபட்டுப் பிணி நீங்கப்பெற்றான்,

புஷ்கரக்ஷேத்ரம் (35) அச்வமேதம் என்ற யாகம் செய்ய விழைந்தார் பிரம்மா. ஸத்யலோகத்திலிருந்து தாமரைகள் கையில் ஏந்தி புறப்பட்டார். அந்த தாமரைகளில் ஒன்று பூமியில் ஓரிடத்தில் லிங்கத்தின்மேல் விழுந்தது. அந்த லிங்கம் புஷ்கரேச்வரலிங்கம். அந்த க்ஷேத்ரம் புஷ்கரம். தேவச்சிற்பி யான விச்வகர்மா அங்கு ஆலயம் எழுப்பினான். கங்கையும் ஸரஸ்வதியும் கூடும் இடமான அங்கு யாகசாலை நிறுவப்பட்டது. யாகத்திற்காக குதிரை திக்விஜயம் செய்து திரும்பிவிட்டது. ஆனால் பிரம்மாவின் பத்தினியான ஸாவித்ரி யாகத்தின் தொடக்கத்திற்கு வந்து சேரவில்லை. பொறுமை இழந்த பிரம்மா இந்திரனை அழைத்து வேறு பத்னி கொண்டுவர ஆணையிட்டார். இந்திரன் வழியில் அகப்பட்ட அழகான ஆய்ச்சிப்பெண்ணை அழைத்து வந்தான். விஷ்ணு இவள் எப்படியாக பத்னி ஆவாள்? என்று சிரித்தார். பிரம்மா யாகத்தை நடத்தி வைக்கும் அத்ரியை அழைத்து அந்த இடைப்பெண்ணுக்கு யாகபத்னியாக தீட்சை செய்விக்க உத்தரவிட்டார். அதற்குள் ஸாவித்ரியும் வந்து விட்டாள். அவளை உதாசீனம் செய்து இடைப்பெண்ணுக்கு தீட்சை அளிக்க வற்புறுத்தினார் பிரம்மா. அத்ரி தயக்கத்துடன் செய்து வைத்தார். சாவித்ரி வெகுண்டெழுந்தாள். இடைப்பெண்ணை அழைத்து இந்திரன் பதவி இழக்கவும் அவன் மனைவி சசியைத் தாற்காலிக இந்திரப்பட்டம் பெற்ற நகுஷன் தீண்டவும் சாபம் இட்டாள். ஸந்ததியற்றுப்போ என்று அத்ரியைச் சபித்தாள். உம்தலையை சிவன் கிள்ளட்டும் என்று கணவனை பிரம்மாவையும் சபித்தாள். இடைப் பெண்ணை இகழ்ந்த நாராயணன் பெற்றம் மேய்த்துண்ணும் குலத்தில் பிறக்கட்டும் என்றாள். தக்ஷயாகத்தின்போது இந்த யாகத்தில் ஈடுபட்ட பிராமணர்கள் அனைவரும் அவமானமடையட்டும் என்று குமுறினாள். பிறகு ஓய்ந்தாள். விஷ்ணு அவளிடம் வந்து ஆறுதல் கூறினார். ''இடைப்பெண் ஆனால் இவள் மிக்க தகுதியுடையவள். இவளை உன்னோடு இணைத்துக் கொள்வது உனக்குப் பெருமைதரும்''—என்று போதித்தார். அவளைத் தோழியாக ஏற்று இருவரும் யாகத்தில் பங்கு கொண்டனர். யாகம் தொடங்கியது. ஆனால் சிவபக்தர்களுக்கு அந்த யாகத்தில் வரவேற்பு இல்லை. அவர்கள் சிவனிடம் முறையிட்டனர். சிவன் பிச்சாண்டியாக வேடம் போட்டுக் கொண்டு யாகசாலை வந்து சேர்ந்தார். அவர் தீண்டத்தகாதவர் என பிராமணர்கள் நினைத்தனர். ஆனால் பிரம்மா அவனை வரவேற்க விழைந்தார். சிவன் ஸரஸ்வதியில் ஸ்நானம் செய்து புஷ்கரேசனை வழிபட்டு வருவதாகச் சொல்லிவிட்டு கையில் உள்ள கபாலத்தை அந்த யாகசாலையில் வைத்து விட்டு அகன்றார். அந்தத் தீண்டத்தகாத கபாலத்தை ஆட்களைக்கொண்டு அகற்றச் சொன்னபோது ஆங்காங்கு யாகசாலை முழுவதும் கபாலங்கள் தோன்றின. வந்தவர் யார்? என்று அறிந்த முனிவர்கள் சிவபெருமானைத் துதித்தனர்,

சிவபெருமான் தோன்றி சிவனடியார் பெருமை எடுத்துச் சொல்லி அவர்களை வரவேற்காத—தகுந்தபடி பூஜிக்காத—எந்த கர்மாவும் பயனற்றுப்போகும் என்று அறிவுறுத்தினர். பிறகு சிவனடியார்களுக்குச் சிறப்பாக விருந்தளித்து யாகத்தைப் பூர்த்தி செய்தார் பிரம்மா.

பீமேச்வரம்—36. புஷ்கரத்திற்கு நேர் தெற்கே பீமேச்வரம் இருக்கிறது குணி என்ற மகரிஷி பிரதிஷ்டை செய்த லிங்கம். ஆதலால் குணிகும்பேச்வரம் என்ற பெயரும் உண்டு. ச்வேதன் என்ற அரசன் அந்த லிங்கத்தை வழிபட உட்கார்ந்து—நேரம் போவது தெரியாமல் பூஜிக்க ஆரம்பித்தான். என்றோ ஆரம்பித்த பூஜை முடியவே இல்லை. இதனிடையே அவனுக்குச் சாவு குறுக்கிட்டது. சிவபூஜை மத்தியில் அவன் உயிரைப்பறிக்க துணியவில்லை யமதூதர்கள். அவன் மரணத்திலிருந்து தப்பினன். இப்படிக் காலத்தை ஜீரணம் செய்த இடமானதால் அதற்குக்காலஞ்ஜரம் என்ற பெயரும் உண்டு. அங்கு விஷ்ணு விஷ்ணுஸவம் என்ற யாகம் செய்து சிவபெருமானுக்கு மகிழ்ச்சி அளித்தார். அந்த மகிழ்ச்சிக்கு அடையாளமாக சிவபெருமான் லிங்கவடிவில் விஷ்ணுவின் தலையில் அமர்ந்தார். அப்படியே விஷ்ணு பீமரதிநதியின் தென்கரையில் அமர்ந்தார். அவரே பாண்டுரங்கன் அந்த க்ஷேத்ரமே பண்டரீபுரம். இன்னும் பாண்டுரங்கன் தலையில் சிவலிங்கம் காணப்படும். கோநந்தகன் என்றொரு இடையன் அவனுடைய பசுக்கள் பக்தியோடு இந்த பரமேச்வரனின் தலையில் தம் பாலைச் சொரிந்தன. அந்தப் பசுக்களில் ஒன்றுக்குப்பெயர் நந்தினி. ஒருநாள் அந்தப்பசு தனியாக மேய்ந்து கொண்டிருந்தபொழுது ஒரு புலி எதிர்ப்பட்டது "கன்றுக்குப்பால் கொடுத்து விட்டு உனக்கு இரையாகிறேன்" என்று வேண்டிக்கொண்டது நந்தினி. புலியும் இணங்கியது பசு கன்றுக்குப் பால் கொடுத்துவிட்டு கன்றுடன் அங்கு வந்து சேர்ந்தது. கன்று தன்னை ஏற்றுப் பெற்ற தாயைவிட்டுவிடும்படி புலியிடம் வேண்டியது. புலி மறைந்து பரமசிவன் தோன்றினர். பசுவினுடைய நாவின் நயத்தையும் கன்றின் பரிவையும் மெச்சி அருள்புரிந்தார்.

சுதர்சன சரிதம் (37-39) அவந்தி புரியில் சுதர்சனன் என்றொரு அந்தணன் தன்னுடைய நெறி மீறிச் செல்வச் செருக்கினுல் கெட்ட பழக்கங்களுக்கு ஆட்பட்டு மது மாதர்களுக்கு வசப்பட்டு கடைசியில் வியாதியில் வீழ்ந்தான். ஒரு நாள் ஒரு சிவனடியார் அந்த ஊருக்கு வந்தார். மாலை வேளை. அன்று பிரதோஷம். தவறாது பிரதோஷ பூஜை செய்யும் பழக்கம் உள்ளவர். சுதர்சனனின் மனைவியிடம் அந்த வீட்டில் 'பூஜை செய்ய அனுமதி கேட்டார். அவளும் பக்தியுடன் அனுமதித்தாள். பிரதோஷ பூஜை நடந்தது. கட்டிலில் வியாதியில் கிடந்து மூழ்கின சுதர்சனன் கண்களில் சிவதீபாராதனை பட்டது. சில நாட்களில் அவன் இறந்தான் அவன் செய்த

பாவங்களுக்காகப் பலவித நரகங்களுக்கு ஆட்பட்டான். அப்போது சிவ கணங்கள் அங்கு தோன்றினர். அவனை மீட்டனர். அவனுடைய சகவாசம் பெற்ற மற்ற பாவிகளும் விடுதலை அடைந்தனர். இது எப்படி? என்று வியந்தனர் யமபடர்கள். ''சிவபூஜை அவன் கண்ணில் பட்டதே! அதுவே போதும். அவனுடைய விடுதலைக்கும், அவனைச் சார்ந்தவர்களின் விடுதலைக்கும்'' என்று பகர்ந்தனர் சிவ கணங்கள். சிவபக்தியின் பெருமை உணர்ந்தனர் யமபடர்கள்.

இந்த அம்சத்தின் கடைசியான நாற்பதாவது அத்யாயத்தில் ஆதிசேஷன் அருளின சிவ ஸஹஸ்ரநாமம் (ஆயிர நாமங்கள்) இருக்கிறது. இதில் ஒரு சிறப்பு. ஸ்ரீ ருத்ரத்தில் காணப்படும் அத்தனை பெயர்களும் இங்கே பொருத்தப்பட்டிருக்கின்றன. இதைப் பாராயணம் செய்தால் ஸ்ரீ ருத்ர பாராயணம், ஸஹஸ்ரநாம பாராயணம் இரண்டும் செய்து புண்ணியம் ஒருங்கே கிட்டும்.

### "சங்கரம் என்ற ஆறுவது அம்சம்"

''அதில் உள்ள அம்சங்கள் பனிரெண்டுக்குள்
அத்யந்தம் அதிசயமாம் ஆறும் அம்சம்
ஈதினை முன்பொருகாலம் கைலாயத்தில்
இணையில் சிவன் ரிபுவுக்குத் தனித்து உரைத்தான்.

அரியதினும் அரிதான இவ்வம்சத்தில்
அமைவுற்ற அத்தியாயம் ஐம்பதாகும்
பரவும் இதில் நாற்பத்து நான்கத்தியாயம்
பரமசிவன் அருள் செய்த பரிசேயாக
திருமலமாய் ரிபுமுனிவன் நிதாகனுதி
நிகில மாமுனிவர்க்கு நிகழ்த்தலாலே
உரை தரும் இவ் வத்யாயம் அனைத்துமிங்கே
உத்தமமாம் ரிபுகீதை என்னலாகும்

இன்னவிதம் வடமொழியால் ஈசன்-தானே
இயம்பிடும் இவ்வாறும் அம்சத்தின்கண்
முன்னர் உளவாம் ஒரு மூன்றத்தியாயங்கள்
முடிவில் உளவாம் ஒரு மூன்றத்யாயங்கள்
பன்னிபிடும் கருத்துடனே நடுவில் உள்ள
பரமான நாற்பத்து நான் கத்யாயம்
மன்னிய இக்கீதையினை முமுட்சுவெல்லாம்
மதிக்கும் வண்ணம் தமிழ்க்கவியால் அமைக்கின்றேன்யான்

சூதமுனி நைமிச வாரண்யத்தில் உள்ள
சுத்த மகாமுனிவரை நோக்கிச் சொல்வான்''
''வேதியரே! மீளவும் அச் சைகீஷவ்யன்
விமல சிவன் சுதனை கந்தன் தன்னைக்
காதலுறும் அனேகமுனி கணங்களோடும்
கறையற்ற அனேக சிவகணங்களோடும்
விதலுரு மகிழ் வுடனே இறைஞ்சி ஏத்தி
விநயமுடன் இவ்விதமாய் வினவினுல்

அருள்வடிவே அருள்வடிவாம் பரேசன் சேயே
அடைக்கலம் என்றடைந்தவரை ஆளும் கோவே
சருவம் உணர் சிகாமணியே சிவமே நோக்கும்
சண்முகவா நின தருளால் ஐந்தம்சங்கள்
இருளறவே கேட்டனள்-மேல்-ஆருமம்சம்
இனி அருளி-நின் வசனச்சுதையினுலே
கருகு பவதாபமெலாம் நீக்கி-என்னைக்
காத்திடுவாய்-எனலோடும்-கந்தன் சொல்வான்.

உரிய குண மேலான சைகீஷவ்யா
உனது திட பக்தியினுல் மகிழ்வுற்றேம் யாம்.
சருவ சகன்னுயகனும் பரேசன் தானே
சாட்சாத்தாய்ச் சகலருக்கும் இதமே யாக
நிருமலமாம் ரிபுமுனியை நோக்கி முன்பு
நிகரற்ற கைலாய கிரியிற் சொன்ன
இருமையிலா ஞானமஹார்ணவத்தை
எல்லோர்க்கும் இதமாக இங்கு சொல்வார்

முன்பொருகால் சமமுதலா நற்குணங்கள்
முழுதுமுள ரிபுமுனிவன் கைலாயத்தில்
துன்பமெல்லாம் தீர்க்கின்ற என்பிதாவைத்
துகளறவே தரிசித்து மிக வணங்கி
இன்பமிகும் அகண்ட பரஞானம் வேண்டி
ஈசனருளுரமாகக்கிடைப்பதற்கு-அச்
சம்புவினைக்குறித்து மிகுமன்பினேடே
சாலவும் வினயமுடன் போற்றலுற்றுன்.

போற்றிய பின் பரமசிவனை நோக்கிச் சொல்வான்
''பூரணமாம் சற்குருவே இன்றெனக்குத்
தோன்றிய இத்து விதமெல்லாம் துடைக்கத்தக்க
துகளற்ற அத்து வித ஞானம் தன்னை

ஏற்றிய நற்கருணையினால் உபதேசித்து-இங்கு
எல்லோரும் இதன் வழியாய் உய்யும் வண்ணம்
சாற்றி யருள் செய்திடுவாய்"-என்னலோடும்
சங்கரனும் "சரி" யெனவே அருளிச் செய்தான்.

"அயன் சுதனும் ரிபு முனிவா! வேதாந்தத்தின்
அருத்தமெலாம் அழுக்கறவே தெரிவிக்கின்ற
இயல்புளதாம் சூத்திரம் ஓர் நான்கத்யாயம்
இயாம் அருளிச் செய்ததின் விசாரத்தாலே
பயமாறவா அகண்ட பரஞானம் உண்டாம்
பவம் நீங்கும்—பரப்பிரமானந்தம் எய்தும்
அயலற நீகேள்—எனவே யதனைமுற்று
மகிழ்வுடனே ரிபுவுக்கு மகேசன் சொன்னான்

சொன்னவுடன் ரிபுமுனிவன் சூத்திரத்தின்
சூட்சுமமாம் பொருளையெல்லாம் கேட்டவண்ணம்
பின்னமற—மனதிடை மனனஞ் செய்து
பின்னுமதை த்தியானித்துப் பூன்றஞானம்
மன்னியகால்—பவத்துன்பம் அனைத்தும் நீங்கி
மகத்தான ஆனந்தம் மருவினோனாய்
அன்ன சிவன் திருவுருவை இறைஞ்சி ஏத்தி
அதிசயமாம் அன்புடனே போற்றலானான்

இன்னவிதம் பரசிவனைத் துதித்துப் பின்னும்
இறைஞ்சி அவன் அனுஞ்ஞையினால் அவிடம் விட்டு
பின்னமிலா ஆனந்த அனுபவத்தின்
பெலமுடனே அங்கங்கே சஞ்சரித்து
மன்னு சில அதிகாரிக்கு இஞ் ஞானத்தை
மகிழ்வுடனே அங்கங்கே உபதேசித்த
பின்னர் சில ஏதுவினால் புவியன் கண்ணே
பிறங்கியதாம் கேதாரத்தலத்தில் வந்தான்.

பாரின் மிசை இமகிரியின் சிகரத்தின் கட்
பற்றியதாம் கேதாரத்தலத்திருந்து
பூரணமாய்ப் பொருந்திய அக் கேதாரேசன்
பூசனையே புரிந்து மிக விரக்தி கூர்ந்து

நீரமுறு சிவபக்தி சிவஞானங்கள்
இடமாகி விபூதியுடன் உருத்திராக்க
ஆரமுதற் சிவசின்னம் அணைத்தும் பூண்ட
அயன் சுதனும் ரிபு முனியை முனிவர் கண்டார்.

கண்ட வுடன் நிதாக சுக ராதியான
களங்கமிலா முனிவரெலாம் அன்பு கூர்ந்து
தண்டெனவே நன்றாக வணங்கி ஏத்தித்
தகைமை மிகும் ரிபுமுனியை நோக்கிச் சொல்வான்
"பண்டொருகால் பரசிவனைக் கைலாயத்தில்
பக்தியுடன் பாங்காக ஆராதித்து அவ்
வண்டர்பிரான் கருணையினல் அகண்ட ஞானம்
அகிலர்க்கும் இதமாக அடைந்தாயன்றே.

சலனமிலா அகண்ட பர ஞானம்பெற்ற
சற்குருவே! பரமசிவன் கருணையாலே
*கலனமிலாச் சுருதிமுடிச் சூத்திரத்தின்
கருத்தான அகண்ட பர சிவ ஞானத்தை
அலைவறவே நீ முன்னமடைந்த வண்ணம்
அத்யந்த கருணையினல் எங்கட்கெல்லாம்
உலைவு தரு பவபந்தம் அனைத்தும் நீங்கி
உத்தமமாம் முத்திபெற அருள்செய்வாயே.

தேசிக! நின் கருணையினல் கிடைப்பதான
திவ்யமா ஞானமெனும் நாவாய் கொண்டே
நீசமுறும் சமுசார சாகரத்தின்
நின்று அமல பரப்பிரமதீரமேறிச்
சாசுவத சொரூபமதாய் இருப்பம்" என்றே
சகலருமே வினயமுடன் சாற்றலொடு
மாசணுகா ரிபுமுனியும் அதனைக்கேட்டு
மகிழ்வுடன் அம் முனிவரை நோக்கிச்செல்வான்

"பரமசிவன் பூசனையே முதலாம் பத்தி
பண்ணியதால் அவனருளுக்கு உரியரான
நிருமல மாமுனிவரரே உங்கட்கெல்லாம்
நிகழ்த்தவொணு ரகசியமாம் பொருளே இல்லை

*கலனம்—தட்டுக்கெடல்

அரிய சிவனடியாருக்கு மறைக்கத்தக்க
  தானபொருள் எங்கேனும் எவையும் உண்டோ?
உரியவரே ஆதலினால் உங்கட்கு இன்றே
  உத்தமமா ஞானத்தை உபதேசிப்பாம்

குறைவற்ற பரமசிவன் முன்பு எனக்கு
  குறைவறவே கருணையினால் உரைத்த வண்ணம்
கறையற்ற சுருதிமுடிச் சூத்திரத்தின்
  கருத்தான ஞானத்தை உரைப்பம் கேண்மின்
மறுவற்ற முனிவரரே இஞ்ஞானத்தால்
  மகத்தான பவ பந்தமுடனே நீங்கி
நிறைவுற்ற பரப்பிரம்ம வடிவே ஆகி
  நீரென்றும் நிச்சலமாய் நின்று வாழ்வீர்.''

இப்படி அமைகிறது ஸ்ரீ சிவரகசியத்தின் ஆறும் அம்சம். இந்தச் சிவ ரகசியத்தைப் பரிசோதித்துப் பதிப்பிக்க ஏற்றுக் கொண்டவுடன் – இந்த மாளாக்காரியத்தை எடுத்துமுடிக்கத்–தகுதி மன உறுதி வேண்டி– ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சங்கராசாரியர், ஸ்ரீ சந்த்ரசேகரேந்த்ர ஸரஸ்வதீ ஸ்வாமிகள் – கி. பி. 1969ல் ஹைதராபாத்தில் முகாம் இட்டிருந்த பொழுது சென்று வணங்கி பிரார்த்தித்தேன். என் வாழ்க்கையில் பல புனிதச் செயல்களில் என்னை ஈடுபடுத்திச் செயல் ஊக்கமளித்த குருநாதன் மிகவும் கருணையுடனே இந்த இதிகாசம் பற்றி விரிவாக எடுத்து உரைத்தார்கள். ''மஹாபாரதம் யோக வாஸிஷ்டம் முதலிய புராணங்கள் போல வேத நெறியை விளக்க வந்த இந்த நூல் வெளிவருவது மிகவும் அவசியம் ஆகும்'' என்று சொல்லி மைசூர் அரசாங்கம் பல வருஷங்களுக்கு முன்பே கன்னட லிபியில் மூலமும் கன்னட உரையுடனும் வெளியிட்டிருப்பதை – ஸ்ரீ மடம் நூலகத்திலிருப்பதைப் பெற்று ஒத்துப்பார்த்துப் பதிப்பிக்கவேண்டும் என்று சொல்லிவிட்டு அரிய செய்தி ஒன்று சொன்னார்கள்.''

''ஸம்ஸ்கிருத உலகிலேயே இந்த நூலுக்கு அவ்வளவு பிரசித்தி இல்லை — என்பது இதுவரை தேவநாகரியிலோ தமிழ்நாட்டில் வழங்கும் கிரந்தலிபியிலோ இதுவரை வெளியிடப்படவில்லை என்ற காரணத்தினால் தோன்றலாம். ஆனால் அப்படியில்லை. தமிழ்நாட்டில் பல வீடுகளில் இதன் சுவடிகள் காணப்பெறலாம். அதற்குக் காரணம் மஹாபாரதத்திற்கு பகவத்கீதையும். கந்தபுராணத்திற்கு சூதசம்ஹிதையும் பெருமை அளிப்பது போல இந்த சிவரகசியத்தில் ஆறும் அம்சமான ரிபுகீதை அமைந்திருக்கிறது. இந்த ரிபு கீதை அத்வைத வேதாந்தத்தை அப்பழுக்கில்லாமல் எடுத்து போதிக்கிறது.

இதன் தனிச்சிறப்பு — எது மற்ற நூல்களில் அனுமானம் முதலிய யுக்திகளினலும் இலக்கணங்களை முதலில் வகுத்துக்கொண்டு அந்த இலக்கணங்களைத் தத்துவங்களுக்குப் பொருத்திக்காட்டி நிரூபிக்கப்பட்டிருக்கிறதோ— அது இந்த நூலில் சிக்கலில்லாமல்—பாமரனுக்கும் புரியும்படியாக விபரமாகக் கொடுக்கப்பட்டிருக்கிறது. பல கோணங்களிலிருந்து ஒரு தத்துவத்தை எடுத்துக்காட்டும்போது சொன்னதைத் திருப்பிச்சொல்லவேண்டிய அவசியம் ஏற்படுகிறது. சொன்னதையே சொல்ல - பல தடவைகள் சொல்ல - பல முறைகளில் சொல்ல இந்த ரிபுகீதை அலுக்கவில்லை.

தமிழ்நாட்டில் இந்த சிவரஹஸ்யத்தைப் பல வீடுகளில் சுவடிகளில் எழுதிவைத்துக் காப்பாற்றியிருக்கிறார்கள் என்பதற்கு ஓர் அடையாளம்-இந்த ரிபுகீதை நூறு வருடங்களுக்கு முன்பே தமிழில் பெயர்க்கப்பட்டிருக்கிறது. திருவிடமருதூரில் பிட்சு சாஸ்திரி என்ற ஒருவர் இருந்தார். அவர் கோவிலூர் அருணாசல ஸ்வாமிகளிடம் சிவதீட்சை பெற்றார். குருவின் உத்தரவுக்குப் படிந்து அந்த பிட்சு சாஸ்திரிகள் தமிழில் விருத்தங்களாக மொழி பெயர்த்தார். தஞ்சாவூரில் பூர்ணசந்த்ரோதய அச்சுக்கூடம் என்று ஒரு அச்சுக்கூடம் பல அரிய வேதாந்த நூல்களை வடமொழியிலிருந்து மொழி பெயர்த்து அச்சிட்டது. அவர்களே இந்த ரிபு கீதையையும் அச்சிட்டிருக்கிறார்கள். இந்த நூலைத் தேடிக் கண்டுபிடித்து — ஆறும் அம்சம் பதிப்பிக்கும்போது முன்னுரையினால் இந்தத் தமிழாக்கத்தை விரிவாக நீ குறிப்பிட வேண்டும் என்று ஆணையிட்டார்கள்.

இந்த ஆணையை நிறைவேற்றும் முறையில் இந்த தமிழ் முன்னுரையின் தொடக்கத்திலும், ஆறும் அம்ச முன்னுரையின் தொடக்கத்திலும் அந்த பிட்சு சாஸ்திரிகள் இயற்றிய ரிபுகீதையின் செய்யுள்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. வடமொழியில் உருவாகி—வடமொழி வல்லுனர்களையே திகைக்கவைக்கும் பல கருத்துக்களைத் தெள்ளிய தமிழில் பிட்சு சாஸ்திரிகள் — தவறின்றி — தயக்கமின்றி — தடுமாறுமல் — தீர்மானத்துடன் எடுத்துச் சொல்கிறார்.

“ஒன்றிலதாம் தன்மையினால் இரண்டுமில்லை
உபயமிலாத் தன்மையினால் ஒன்றுமில்லை
துன்று பயமிலாமையினால் அபயமில்லை
தொடர் அபயமிலாமையினால் பயமுமில்லை
நின்ற சுபமிலாமையினால் அசுபமில்லை
நிகழ் அசுபமிலாமையினால் சுபமுமில்லை
என்று மறிவான வொரு ஆன்மா வென்றே
எப்போதும் இருப்பதென நிச்சயிப்பாய்

சத்து இலதாம் தன்மையினால் அசத்துமில்லை
சஞ்சலமாம் அசத்து இலதால் சத்துமில்லை
சுத்தமிலாத் தன்மையினால் அசுசி இல்லை
சொலும் அசுசி இலாமையினால் சுசியும் இல்லை
தொத்துமிடரிலாமையினால் சுகமுமில்லை
தொடர்ந்த சுகமிலாமையினால் இடருமில்லை
இத் "துவிதம்" (இரட்டை) எவையும் இலா ஆன்மாவொன்றே
எப்போதும் இருப்பதென நிச்சயிப்பாய்

பிரம மகம் அகம் பிரமம் என்றிவ்வண்ணம்
பிரியாத நிச்சயமோடு இருப்பதற்கு
சருவவித உலகத்தும் சாரப்பட்ட
சகல பொருட்டானமும் ஓர் ஈடே அன்று
பிரமமகம் அகம் பிரமம் என்றிவ்வண்ணம்
பிரியாத பாவனையோடு இருப்பதற்கு இங்கு
ஒரு சுகமும் ஒருக்காலும் ஈடேயன்று அங்கு
ஒன்றிய அச்சுகத்துக்கு அச்சுகமே ஈடாம்

இவ்வளவு அருமையாக அமைந்த தமிழாக்கத்தினால் ரிபு கீதைக்குப் பெருமை. இந்த ரிபு கீதையின் உள்ளடக்கத்தினால் சிவரகசியத்திற்கே பெருமை. இந்தப் பெருமையை எனக்கு உணர்த்திவைத்த காஞ்சி காமகோடி பீடாதிபதி சங்கராசார்ய ஸ்வாமிகளுக்கு முதற்கண் அடிவணங்கிக் கைகூப்பிச் சிரமேல் அஞ்சலி தாங்கி ஒருவாறு கடமை செலுத்துகிறேன்.

இந்தத் தமிழ் நூலை முறைப்படி முதற்கண் சரஸ்வதி மஹால் நூலகத்தில் தேடினபொழுது அது கிடைக்கவில்லை. தஞ்சையிலேயே பிரசுரிக்கப்பட்ட ஒரு நூல் அதுவும் தற்சமயம் மிகுந்த ஆர்வத்துடன் பல அரிய தமிழ் நூல்களை மிகவும் அக்கரையுடன் தமிழ்ப் புலவர்கள் சேர்த்துக் கொடுத்து நூலகத்திற்குப் பெருமை தேடித் தரும்போது இந்த நூல் அகப்படவில்லையென்றால் இதன் அருமை ஒருங்கே ஆவலையும் கவலையையும் தந்தது. தேடத்தேட புலவர்கள் பலர் கேள்விப்பட்டிருப்பதாகச் சொன்னார்களே தவிர அதற்குமேல் செய்தி கிடைக்கவில்லை. இந்த நூலின் பதிப்பு தாமதமாகி வந்ததால் ஆர அமர இந்தத் தமிழாக்கத்தைப் பற்றி விசாரிக்கப் போதிய அவகாசம் கிடைத்ததே ஒழிய பயனளிக்கவில்லை. காஞ்சி முனிவர் பணித்தப்படி இந்தத் தமிழ் நூலைப்பற்றிக் குறிப்பிடாமல் முன்னுரை எழுதி முடிக்கவும் மனம் இல்லை. இந்த அச்சமே உருவாக காஞ்சி முனிவர்களின் நினைவு என்னை அல்லற்படுத்தியது. அப்போது நிகழ்ந்தது ஓர் அதிசயம். தஞ்சை வழக்கறிஞர் சேக்கிழார் அடிப்பொடி

திரு டி என். ராமச்சந்திரன் எனது உற்ற நண்பர். ஆங்கிலத்திலு தமிழிலும் அதுவும் சைவ சித்தாந்தத்திலும் புலமை மிக்கவர். சரஸ்வ மஹால் நூலகத்திலேயே அகப்படாத இந்த நூல் அவரிடம் இருக்கா என்று அசட்டு வேகத்துடன் அவரிடம் இதைப்பற்றி இவ்வளவு ஆண்டுக விசாரிக்காமலேயே இருந்து விட்டேன். கடைசியாக காஞ்சி முனிவரிட உள்ள அச்சம் திரு டி. என். ஆரிடம் துரத்தியது. கைமேல் பலன் கிடைத்த அவரிடம் கிடைத்தது மஹேதிகாசமாகிய சிவரகசியத்தில் ஆறுவ அம்சத்திலுள்ள ரிபு கீதை. இஃது கோயிலூர் சிவஸ்தலத்தில் எழு தருளிய துறவு சுவாமிகள் என்னும் அருணாசல சுவாமிகள் வேண்டுகோளின் படி திருவிடைமருதூர் பிட்சு சாஸ்திரிகள் என்னும் ஸ்ரீ உலகநாத சுவாமிகளா மொழி பெயர்க்கப்பட்டது ஸ்ரீ கோவிலூர் ஸ்ரீ பொன்னப்ப சுவாமிகளா பார்வையிடப்பட்டு கருவூரைச் சார்ந்த அரவக்குறிச்சி மகா-௱-௱-ஸ்ரீ மு. இராமசாமி முதலியாரவர்கள் வேண்டுகோளின்படி தஞ்சை மாநகர B. வீரபத்திரப் பிள்ளையவர்கள் சகோதரராகிய வெ கோவிந்தசாமி பிள் அவர்களால் தஞ்சை பூர்ணசந்த்ரோதய அச்சுக்கூடத்தில் பதிப்பிக்க பட்டது. இரண்டாம் பதிப்பு துர்முகி-ஞு மேஷ-மீ (1897) (Copy Right Reserved) (அந்தப் பதிப்பின் முதற்பக்கம் அப்படியே கொடுக்கப்பட்டு இருக்கிறது)

இது தவிர திரு டி. என். ஆர் மேலும் சில தகவல்கள் கொடுத்தா "சென்னையில் ஸ்ரீ ஹரபாத்ர சிவபிரகாச சுவாமிகள் என்பவர் எழுப ஆண்டுகளுக்கு முன் வேதாந்த மனன சிந்தாமணி என்றொரு தமி பாடற்றிரட்டு தயாரித்து பிரசுரித்திரிக்கிருர். இரண்டு பாகங்களில் சுமா 1500 பக்கங்கள் கொண்ட அந்த நூலில் இந்த ரிபு கீதையின் தமி ஆக்கத்திலிருந்து சுமார் ஐநூறு பாடல்கள் தொகுத்து அளிக்கப்பட்டு இருக்கின்றன. சைவ சித்தாந்தத்தின் பல அடிப்படை 'தத்துவங்களுக்கும் செஞ்சொல் விளக்கத்திற்கும் இந்த ரிபு கீதை எனக்கு உதவியாக இருக்கிறது" என்று குறிப்பிட்டார் திரு டி. என் ஆர். காஞ்சி முனிவரின் அருளே திரு டி என் ஆரிடம் பிரவேசித்து இந்த முன்னுரையை அவர்கள் விருப்பப்படி முழுமையாக்க உதவியது என்று நினைக்கும் நேரத்தில் பெரியோர்கள் அருள் திரு ராமச்சந்திரன் அவர்களுக்கு கிட்டுவதாக என்று வேண்டுகிறேன்.

இந்தச் சிவரகசியம் அதன் மாளா விரிவுக்கும் பெருமைக்கும் ஏற்ப அச்சுக்குத் தயாரிக்கும் நிலையில் என் கவனத்தைப் பெரிதும் ஈர்த்தது. மிகவும் அக்கரையுடன் துரிதப்படுத்திய நூலக நிர்வாகப் பொறுப்பு அதிகாரி திரு அ பஞ்சநாதன் எம் ஏ பி லிப் எஸ்சி அவர்களுக்கு எவ்வளவு நன்றி

செலுத்தினலும் போதாது. தவிர இந்த மிகப் பெரும் பணியில்—மூல பிரதிகளை ஒத்துப் பார்த்து அச்சு பிரதி தயாரிப்பதில் பெரிதும் உதவி செய்த எனது தமையனர் திரு எஸ். வி, பாலகிருஷ்ண சாஸ்திரிகளுக்கு என் வணக்கங்கள் உரியன. அச்சுப் பிரதிகளை அவ்வப்போது புருப் பார்த்து ''பதிப்பாளரால் தாமதம்'' என்ற அவப்பெயர் வராது காத்த என் தம்பி திருச்சி ஆயுர்வேத விசாரத திரு எஸ் வி ராதாகிருஷ்ண சாஸ்திரிக்கு என் ஆசிகள் உரியன. இவ்வரிய நூலின் மிகுதிப் பகுதிகள் தாமதமின்றி வெளி வருவதற்கு பரமேச்வரன் அருள்புரிவாராக!

தஞ்சை
25—7—83

வெ. ஸ்வாமிநாத ஆத்ரேயன்.

# चतुर्थांशः


| அத்தியாயம் | अध्यायः | Chapter | | Page No. |
|---|---|---|---|---|
| ஒன்று | प्रथमोऽध्यायः | I | ... | 1 |
| இரண்டு | द्वितीयोऽध्यायः | II | ... | 3 |
| மூன்று | तृतीयोऽध्यायः | III | ... | 5 |
| நான்கு | चतुर्थोऽध्यायः | IV | ... | 8 |
| ஐந்து | पञ्चमोऽध्यायः | V | ... | 11 |
| ஆறு | षष्ठोऽध्यायः | VI | ... | 12 |
| ஏழு | सप्तमोऽध्यायः | VII | ... | 14 |
| எட்டு | अष्टमोऽध्यायः | VIII | ... | 17 |
| ஒன்பது | नवमोऽध्यायः | IX | ... | 20 |
| பத்து | दशमोऽध्यायः | X | ... | 23 |
| பதினொன்று | एकादशोऽध्यायः | XI | ... | 28 |
| பன்னிரண்டு | द्वादशोऽध्यायः | XII | ... | 31 |
| பதின்மூன்று | त्रयोदशोऽध्यायः | XIII | ... | 35 |
| பதின்நான்கு | चतुर्दशोऽध्यायः | XIV | ... | 38 |
| பதினைந்து | पञ्चदशोऽध्यायः | XV | ... | 41 |
| பதினாறு | षोडशोऽध्यायः | XVI | ... | 45 |
| பதினேழு | सप्तदशोऽध्यायः | XVII | ... | 47 |
| பதினெட்டு | अष्टादशोऽध्यायः | XVIII | ... | 50 |
| பத்தொன்பது | एकोनविंशोऽध्यायः | XIX | ... | 53 |
| இருபது | विंशोऽध्यायः | XX | ... | 56 |
| இருபத்தொன்று | एकविंशोऽध्यायः | XXI | ... | 61 |
| இருபத்திரண்டு | द्वाविंशोऽध्यायः | XXII | ... | 63 |

| அத்யாயம் | अध्यायः | Chapter | | Page No. |
|---|---|---|---|---|
| இருபத்துமூன்று | त्रयोविंशोऽध्यायः | XXIII | ... | 65 |
| இருபத்துநான்கு | चतुर्विंशोऽध्यायः | XXIV | ... | 68 |
| இருபத்துஐந்து | पञ्चविंशोऽध्यायः | XXV | ... | 70 |
| இருபத்துஆறு | षड्विंशोऽध्यायः | XXVI | ... | 73 |
| இருபத்தேழு | सप्तविंशोऽध्यायः | XXVII | ... | 76 |
| இருபத்தெட்டு | अष्टाविंशोऽध्यायः | XXVIII | ... | 79 |
| இருபத்தொன்பது | एकोनत्रिंशोऽध्यायः | XXIX | ... | 82 |
| முப்பது | त्रिंशोऽध्यायः | XXX | ... | 84 |
| முப்பத்தொன்று | एकत्रिंशोऽध्यायः | XXXI | ... | 86 |
| முப்பத்திரண்டு | द्वात्रिंशोऽध्यायः | XXXII | ... | 88 |
| முப்பத்துமூன்று | त्रयस्त्रिंशोऽध्यायः | XXXIII | ... | 91 |
| முப்பத்துநான்கு | चतुस्त्रिंशोऽध्यायः | XXXIV | ... | 93 |
| முப்பத்தைந்து | पञ्चत्रिंशोऽध्यायः | XXXV | ... | 97 |

चतुर्थांशः समाप्तः ॥

## पञ्चमांशः

| ஒன்று | प्रथमोऽध्यायः | I | ... | 101 |
|---|---|---|---|---|
| இரண்டு | द्वितीयोऽध्यायः | II | ... | 105 |
| மூன்று | तृतीयोऽध्यायः | III | ... | 111 |
| நான்கு | चतुर्थोऽध्यायः | IV | .... | 117 |
| ஐந்து | पञ्चमोऽध्यायः | V | ... | 122 |
| ஆறு | षष्ठोऽध्यायः | VI | ... | 128 |
| ஏழு | सप्तमोऽध्यायः | VII | ... | 135 |
| எட்டு | अष्टमोऽध्यायः | VIII | ... | 138 |

| அத்யாயம் | अध्यायः | Chapter | | Page No. |
|---|---|---|---|---|
| ஒன்பது | नवमोऽध्यायः | IX | ... | 144 |
| பத்து | दशमोऽध्यायः | X | ... | 149 |
| பதினொன்று | एकादशोऽध्यायः | XI | ... | 153 |
| பன்னிரண்டு | द्वादशोऽध्यायः | XII | ... | 157 |
| பதின்மூன்று | त्रयोदशोऽध्यायः | XIII | ... | 161 |
| பதிநான்கு | चतुर्दशोऽध्यायः | XIV | ... | 166 |
| பதினைந்து | पञ्चदशोऽध्यायः | XV | ... | 170 |
| பதினாறு | षोडशोऽध्यायः | XVI | ... | 173 |
| பதினேழு | सप्तदशोऽध्यायः | XVII | ... | 178 |
| பதினெட்டு | अष्टादशोऽध्यायः | XVIII | ... | 182 |
| பத்தொன்பது | एकोनत्रिंशो ऽध्यायः | XIX | ... | 185 |
| இருபது | विंशोऽध्यायः | XX | ... | 196 |
| இருபத்தொன்று | एकविंशोऽध्यायः | XXI | ... | 202 |
| இருபத்திரண்டு | द्वाविंशोऽध्यायः | XXII | ... | 208 |
| இருபத்துமூன்று | त्रयोविंशोऽध्यायः | XXIII | ... | 212 |
| இருபத்துநான்கு | चतुर्विंशोऽध्यायः | XXIV | ... | 217 |
| இருபத்தைந்து | पञ्चविंशोऽध्यायः | XXV | ... | 222 |
| இருபத்தாறு | षड्विंशोऽध्यायः | XXVI | ... | 229 |
| இருபத்தேழு | सप्तविंशोऽध्यायः | XXVII | ... | 238 |
| இருபத்தெட்டு | अष्टाविंशोऽध्यायः | XXVIII | ... | 246 |
| இருபத்தொன்பது | एकोनत्रिंशोऽध्यायः | XXIX | ... | 250 |
| முப்பது | त्रिंशोऽध्यायः | XXX | ... | 254 |
| முப்பத்தொன்று | एकत्रिंशोऽध्यायः | XXXI | ... | 257 |
| முப்பத்திரண்டு | द्वात्रिंशोऽध्यायः | XXXII | ... | 261 |

| அத்யாயம் | अध्यायः | Chapter | | Page No. |
|---|---|---|---|---|
| முப்பத்துமூன்று | त्रयस्त्रिंशोऽध्यायः | XXXIII | ... | 264 |
| முப்பத்துநான்கு | चतुस्त्रिंशोऽध्यायः | XXXIV | ... | 266 |
| முப்பத்தைந்து | पञ्चत्रिंशोऽध्यायः | XXXV | ... | 269 |
| முப்பத்தாறு | षट्त्रिंशोऽध्यायः | XXXVI | — | 275 |
| முப்பத்தேழு | सप्तत्रिंशोऽध्यायः | XXXVI | ... | 279 |
| முப்பத்தெட்டு | अष्टत्रिंशोऽध्यायः | XXXVIII | ... | 282 |
| முப்பத்தொன்பது | एकोनचत्वारिंशोऽध्यायः | XXXIX | ... | 287 |
| நாற்பது | चत्वारिंशोऽध्यायः | XXXX | ... | 292 |


पञ्चमांशः समाप्तः ॥

## षष्ठोऽम्शः


| | | | | |
|---|---|---|---|---|
| ஒன்று | प्रथमोऽध्यायः | I | ... | 302 |
| இரண்டு | द्वितीयोऽध्यायः | II | ... | 305 |
| மூன்று | तृतीयोऽध्यायः | III | ... | 315 |
| நான்கு | चतुर्थोऽध्यायः | IV | ... | 320 |
| ஐந்து | पञ्चमोऽध्यायः | V | ... | 324 |
| ஆறு | षष्ठोऽध्यायः | VI | ... | 327 |
| ஏழு | सप्तमोऽध्यायः | VII | ... | 330 |
| எட்டு | अष्टमोऽध्यायः | VIII | ... | 335 |
| ஒன்பது | नवमोऽध्यायः | IX | ... | 338 |
| பத்து | दशमोऽध्यायः | X | ... | 342 |
| பதினொன்று | एकादशोऽध्यायः | XI | ... | 346 |
| பன்னிரண்டு | द्वादशोऽध्यायः | XII | ... | 348 |
| பதின்மூன்று | त्रयोदशोऽध्यायः | XIII | ... | 351 |

| அத்யாயம் | अध्यायः | Chapter | | Page No. |
|---|---|---|---|---|
| பதினான்கு | चतुर्दशोऽध्यायः | XIV | ... | 354 |
| பதினைந்து | पञ्चदशोऽध्यायः | XV | ... | 357 |
| பதினாறு | षोडशोऽध्यायः | XVI | ... | 360 |
| பதினேழு | सप्तदशोऽध्यायः | XVII | ... | 363 |
| பதினெட்டு | अष्टादशोऽध्यायः | XVIII | ... | 365 |
| பத்தொன்பது | एकोनविंशोऽध्यायः | XIX | ... | 368 |
| இருபது | विंशोऽध्यायः | XX | ... | 371 |
| இருபத்தொன்று | एकविंशोऽध्यायः | XXI | ... | 374 |
| இருபத்திரண்டு | द्वाविंशोऽध्यायः | XXII | ... | 377 |
| இருபத்துமூன்று | त्रयोविंशोऽध्यायः | XXIII | ... | 380 |
| இருபத்துநான்கு | चतुर्विंशोऽध्यायः | XXIV | ... | 382 |
| இருபத்தைந்து | पञ्चविंशोऽध्यायः | XXV | ... | 385 |
| இருபத்தாறு | षड्विंशोऽध्यायः | XXVI | ... | 387 |
| இருபத்தேழு | सप्तविंशोऽध्यायः | XXVII | ... | 390 |
| இருபத்தெட்டு | अष्टाविंशोऽध्यायः | XXVIII | ... | 392 |
| இருபத்தொன்பது | एकोनत्रिंशोऽध्यायः | XXIX | ... | 393 |
| முப்பது | त्रिंशोऽध्यायः | XXX | ... | 396 |
| முப்பத்தொன்று | एकत्रिंशोऽध्यायः | XXXI | ... | 399 |
| முப்பத்திரண்டு | द्वात्रिंशोऽध्यायः | XXXII | ... | 402 |
| முப்பத்துமூன்று | त्रयस्त्रिंशोऽध्यायः | XXXIII | ... | 404 |
| முப்பத்துநான்கு | चतुस्त्रिंशोऽध्यायः | XXXIV | ... | 407 |
| முப்பத்தைந்து | पञ्चत्रिंशोऽध्यायः | XXXV | ... | 408 |
| முப்பத்தாறு | षट्त्रिंशोऽध्यायः | XXXVI | ... | 410 |
| முப்பத்தேழு | सप्तत्रिंशोऽध्यायः | XXXVII | ... | 412 |

॥ श्रीः ॥

# ॥ श्रीशिवरहस्यम् ॥

## शिवाख्यः चतुर्थांशः ।

### ॥ प्रथमोऽध्यायः ॥

:O:

शर्वाणीवदनारविन्दविकसत्सूर्यप्रभं सुन्दरं सिन्दूरारुणवक्त्रपद्ममलं विघ्नाद्रिवज्रप्रभम् ।
मुक्तागुच्छितकर्णतालममरेन्द्राद्यैश्च वन्द्यं भजे भक्तानामभयाय भूतिविलसद्गात्रैकमोदप्रियम् ॥
माद्यन्मोदकदन्तपाशसृणिभिः संशोभिबाहुं विभुम्[1] ।

जैगीषव्यः —

पञ्चास्यसितपाथोजविकासनदिवाकर । श्रुतं ते तारकाराते कथाख्यानमनुत्तमम् ॥ २ ॥
शिवढुंढिचरितं च शैववर्यस्य चाद्भुतम् । गणानां च गणत्वे वै को हेतुर्वद सादरम् ॥ ३ ॥
नन्दिकेशादयः स्कन्दविष्णुब्रह्मादयः सुराः । मुनयश्च दधीचाद्याः मार्कण्डेयादिगौतमाः ॥ ४ ॥
घटोद्भवोपमन्युश्च भृगुदुर्वासकाः सदा । सम्यक् प्रसाद्य तं प्रापुः स्वाभीष्टं तत्कथं वद ॥ ५ ॥
महेश्वराद्देवदेवात् शङ्कराल्लोकशङ्करात् । त्वं वै कारुणिकश्रेष्ठो गुरुर्मम शिवात्मजः ॥ ६ ॥
अन्ये तु गुरवो लोके गुणत्रयपरायणाः । त्वं निर्गुणोऽसि भगवन् षड्गुण्यपरिपूरितः ॥ ७ ॥
त्वत्तोऽद्य श्रोतुमिच्छामि गणानां चरितं शुभम् । शिवभक्तानुचरितं सुराणां भक्तिकारणम् ॥ ८ ॥
देवदेवे विरूपाक्षे शङ्करे सर्वकामदे । महानन्दे परानन्दे भक्तिकारणमुत्तमम् ॥ ९ ॥
यस्य ज्ञानेन भक्त्या च सर्वं विज्ञातमेव हि । यमात्मानं महादेवं ज्ञात्वा शिवमयो भवेत् ॥ १० ॥
यस्य ध्यानेन मुनयो निवृत्ता मुक्तिमास्थिताः । सगुणो निर्गुणोऽध्यात्मा शिव एव सनातनः ॥

---

१ पञ्चपादोऽयं श्लोकः

श्रोतव्योऽपि च मन्तव्यो नामरूपकथारसैः । शिवानन्दाब्धिकल्लोलमहानन्दैकचन्द्रमाः ॥ १२ ॥
त्वमेव देवसेनानां सेनानीः श्रुतिचोदितः । वद मेऽद्य कृपासारतुषारवरशीकरैः ॥ १३ ॥
प्लावयाशुकथाख्यानैः शंभोर्भक्तिविवर्धनैः । भक्तिरेव विरूपाक्षे श्रेयस्करतरा नृणाम् ॥ १४ ॥
मुक्तये भवतीत्येव न तथा वेदनं शिवे । अव्यक्तवेदनं नृणां भौतिकानां सुदुर्लभम् ॥ १५ ॥
शिवप्रसादहीनानां वासना विषयात्मिकाः । भवन्ति नियतं पुण्ये पापे वा पापिनां ध्रुवम् ॥ १६ ॥
किञ्चित्सत्त्ववतां नृणां पुण्येषु रमते मनः । इष्टापूर्तादिधर्मेषु राजसानां भवेन्मतिः ॥ १७ ॥
सात्त्विकानां शिवार्चादौ भस्मरुद्राक्षधारणे । त्रिपुण्ड्रधारणे पुण्ये तथा शिवकथारतिः ॥ १८ ॥
भवत्येव मतिः पुंसां शांभवानां महात्मनाम् । तामसानां च हिंसादौ पापे धर्मे मतिर्भवेत् ॥
गुणत्रयात्मकाः सर्वे सदेवासुरमानुषाः । पुण्यैर्देवत्वमाप्नोति पापैस्तिर्यक्त्वमश्नुते ॥ २० ॥
[1]गुणत्रयाधिके भक्तिः विरूपाक्षे महेश्वरे । शमाद्यात्मगुणा ये वै अहिंसा ब्रह्मचर्यकम् ॥ २१ ॥
मैत्री भूतेषु करुणा सर्वत्र शिवदर्शनम् । निर्गुणे वाऽपि सगुणे भक्तिर्ज्ञानसमुच्चयः ॥ २२ ॥
ज्ञानेऽपि यादृशं साध्यं साधनं वा सनातनम् । भक्त्याऽनुसाधनं यादृक् तादृगेव हि वेदने ॥
सगुणो गुणरूपैश्च शिवो ज्ञेयः सुखेन हि । उमासहायो विश्वेशो ध्येयो ज्ञेयश्च नित्यशः ॥ २४ ॥
दहरे पुण्डरीके तु हिरण्यश्मश्रुरीश्वरः । हिरण्यबाहुराशास्यो ज्ञेयः स्वात्मतयैव तु ॥ २५ ॥
क्षणमेकं शिवध्यानात् सगुणे क्रतुलक्षणम् । फलमाप्नोति कामात्मा निर्गुणे ब्रह्म वै भवेत् ॥
ऋतं सत्यं परं ब्रह्म ध्यानाद्ब्रह्मैव सो (?) भवेत् । कामान् यः कामयेतैव पुण्यपापेषु वै नरः ॥
स्वर्गं वा नरकं याति वासनावासितो नरः । पर्याप्तकामो भक्त्यैव ज्ञानेनैवाश्नुते परम् ॥ २८ ॥
श्रोतव्यो भगवान् शंभुः कथाभिर्गुणकीर्तनैः । मन्तव्यो रूपमननैर्यथायोग्यं तु निर्गुणः ॥ २९ ॥
स ब्रह्म स शिवः सेन्द्रः सोऽक्षरः परमेश्वरः । स एव विष्णुः स प्राणः स कालोऽग्निः स चन्द्रमाः ॥
स एव सर्वं यद्भूतं यच्च भव्यं महेश्वरः । ज्ञात्वा तं मृत्युमत्येति भक्तिज्ञानेन वै मुनिः ॥

[2]सूतः —

इत्युक्तं मुनिवचनं निशम्य हर्षात् भवभक्तं मुनिमाह शंभुसूनुः ।
आलोक्याखिलवक्त्रलोचनैर्गणेन्द्रान् ध्यात्वा हृत्कमले महेशमिष्टम्[3] ॥ ३२ ॥

इति श्रीशिवरहस्ये शिवाख्ये चतुर्थांशे स्कन्दं प्रति जैगीषव्यप्रश्नवर्णनं नाम प्रथमोऽध्यायः ॥

---

१ गुणत्रयात्मिका—C.  २ C-कोशे नास्ति  ३ अहो वृत्तसंसृष्टिः ।

## ॥ द्वितीयोऽध्यायः ॥

स्कन्दः —

सम्यगुक्तं त्वया तात जैगीषव्य महामते । भवतापहरं शंभोः चरितं सर्वपापहृत् ॥ १ ॥
शिवार्चकजनानां च चरितं शिवतोषकृत् । यथा शिवस्तथा शैवा भेदो नैतेषु दृश्यते ॥ २ ॥
शांभवानां च माहात्म्यं शिवो वेत्ति न चेतरः । शांभवः शिव एवेति विज्ञेयो मुक्तिकांक्षिभिः ॥
वरं शरीरं यच्छंभोः शांभवास्तन्मुनीश्वराः । स्थावरं जङ्गमं श्रेष्ठं शरीरं शिवसंमतम् ॥ ४ ॥
चराचरात्मा भगवानेक एव महेश्वरः । न शांभवात् परं स्थानं शंभोः प्रियतरं महत् ॥ ५ ॥
यत्र शांभववर्याणां समाजस्तत्र शङ्करः । लिङ्गे तुङ्गे बिल्ववने सदाशिवकथासु च ॥ ६ ॥
नृत्यत्यम्बिकया युक्तः स्कन्दहेरम्बपूर्वकः तत् क्षेत्रं पुण्यराशीनां स्थानं प्रीतं त्रिशूलिनः ॥ ७ ॥
शाङ्करा एव देवस्य सर्वदा प्रियविग्रहाः । न गौर्यां नैव विघ्नेशे न नन्दौ स्कन्दके न च ॥ ८ ॥
प्रीतिर्वै देवदेवस्य यादृशी द्वारसत्तमे । मनोहराः शिवस्यैव हारा रुद्राक्षधारिणः ॥ ९ ॥
तस्माच्छाङ्करार्चनेनैव शिवः प्रीतो भविष्यति । शांभवाः शम्भुवो विप्र मुक्तिकान्ता मनोहराः ॥
तेषु प्रीतेषु भगवान् प्रीत एव महेश्वरः । यथा भक्तजनार्चातः प्रीतो भद्राणि पश्यति ॥ ११ ॥
न तथा शिवलिङ्गेषु पूजितोऽपि महेश्वरः । तस्माच्छांभवपूजैव शिवपूजा न संशयः ॥ १२ ॥
शिवभक्ताः शिवाचाराः शिवलिङ्गकपूजकाः । भस्मत्रिपुण्ड्ररुद्राक्षधारिणोऽमलविग्रहाः ॥ १३ ॥
रुद्राध्यायजपासक्ताः पञ्चाक्षरपरायणाः । शिवनामानुसन्धानकन्दलीकृतमानसाः ॥ १४ ॥
शिवध्यानपराः शैवाः पावनाः पावयन्त्यपि । तेषु प्रीतेषु भगवान् प्रीत एव महेश्वरः ॥ १५ ॥
नान्येन कर्मणा शम्भुः प्रीतो भवति सत्तम । स्वतः पूर्णो महादेवः तस्य किं तोषणेन हि ॥
शिवभक्तार्चनेनैव तोषमेति महेश्वरः । शम्भुः शांभवतोषेण तुष्टः कष्टविनाशकः ॥ १७ ॥
अष्टमूर्तिः स्वयं तुष्टो मुक्तिं तस्य प्रयच्छति । शिवभक्तो यत्र तिष्ठेत् तत्र सन्निहितः शिवः ॥ १८ ॥
तस्मिन् भुक्ते शिवो भुङ्क्ते तस्मिन् तुष्टे शिवः स्वयम् । तुष्टः पुष्टिं तथैवास्य तस्य नित्यं प्रयच्छति ॥
शिवार्चको यश्च भक्तः द्विजो वा श्वपचोऽपि वा । भवभक्तो विमुच्येत भस्मरुद्राक्षधारकः ॥
न वर्णाश्रमनिष्ठाऽत्र भक्तिनिष्ठात्र केवला । नास्याचारं परीक्षेत न कुलं न व्रतं तथा ॥ २१ ॥
न शिवाश्रयविज्ञानं परीक्षेत द्विजोत्तम । स मुनिः स तपस्वी च स यतिः स च पण्डितः ॥ २२ ॥

तेनाधीतं श्रुतं तेन तेन तीर्थे समाहितम् । स पात्रं तारयेत् सर्वान् हव्ये कव्ये सुरान् पितॄन् ॥
शिवभक्ते गृहं याते नृत्यन्ति पितरः सदा । तेषु श्राद्धं प्रदातव्यं तृप्ताः स्युः प्रपितामहाः ॥
शिवभक्तानतिक्रम्य अन्येषु निहितं हविः दानं भोज्यं च यद्विप्र तद्भस्मनिहितं हविः । २५ ॥
रुष्ट एव हि गौरीशस्तस्य कष्टं ददाति हि । अष्टमूर्तिकृपानिष्ठाः शैवा एव न संशयः ॥ २६ ॥
वरिष्ठं पात्रमेते हि शैवाः पूज्याः शिवार्चकाः । गणाः सुरा मुनिगणाः किञ्चिच्छम्भोः प्रसादतः॥
शिवभक्ताः शिवज्ञानयुक्ता एव द्विजोत्तमाः । तस्माद्भक्ताः सदा पूज्याः शांभवाः शिवसंमताः॥
ब्राह्मणाः क्षत्रिया वैश्याः शूद्राश्चान्येपि संकराः । शिवभक्ताः शिवाकारा भस्मरुद्राक्षधारिणः ॥
पूज्या एव सदा सर्वे भक्तिश्चात्र गरीयसी । शिलादनश्च शैलादिश्चण्डकेशोऽथ भृङ्गिकः ॥ ३० ॥
रिटिस्तुण्डः सोमनन्दी मार्कण्डेयो घटोद्भवः । उपमन्युर्दधीचिश्च दूर्वासो गौतमो मुनिः । ३१ ॥
कृष्णः शतार्चनो रंभ्यो भृगुर्वाणो भृगूद्वहः । अहं गजाननो गौरी विष्णुब्रह्मादयः सुराः ॥
इन्द्रो यक्षाधिपः सूर्यचन्द्राद्या ग्रहनायकाः । समभ्यर्च्य विरूपाक्षं लब्धवन्तः परं पदम् । ३३ ॥
गणत्वं नन्दिकेशाद्याः विष्णुब्रह्मादयो द्विज । सृष्टिं सुदर्शनं देवनायकत्वं सुरा ग्रहाः ॥ ३४ ॥
ग्रहत्वं देवदेवस्य प्रसादेन मुनीश्वराः । लेभिरे वांछितां सिद्धिं शिवलिङ्गार्चनेन हि । ३५ ॥
राज्यं भुक्तिं च मुक्तिं च लेभिरे नृपसत्तमाः । केचिद्गणा[1] मुनीन्द्राश्च सुरान् बिल्वादिकानपि ॥
वक्ष्यामि भक्तान् शौर्येण तेषां च चरितं मुने । प्रसादमपि महादेवात् तेषां भक्तिं च केवलाम् ॥
यां श्रुत्वा तु भवेद्भक्तो नरः शिवपदाब्जयोः ॥ ३८ ॥

> स्वरवक्त्रादधुना शिवार्चकजनाचारैकभक्तिप्रभाः
>
> शम्भोः पुण्यचरित्रकीर्तनमहामुक्तिप्रवीणाः कथाः ।
>
> वक्तुं मे मतिरीशपादभजनप्रामाण्यतो निस्सर-
>
> त्येषा वक्त्रसरोरुहैर्भगवतश्चाम्बापतेः संस्तवः ॥ ३९ ॥
>
> जिह्वा जिह्मविवर्जितात्ममहिता स्वात्मप्रमोदप्रदा
>
> वक्तुं चाभिलषेत शङ्करकथां शाङ्गाङ्कसङ्गेन हि ।
>
> एतेऽमी मुनयो गणाः सुरगणाः शृण्वन्तु तां शांभवीं
>
> भक्ताभीप्सितदानमोक्षपरमानन्दप्रदां भक्तितः ॥ ४० ॥

इति श्रीशिवरहस्ये शिवाख्ये चतुर्थांशे शिवभक्तिमहिमानुवर्णनं नाम द्वितीयोऽध्यायः ॥

---

१ गणये C.

